

# அபவாதம்

“தன்கிழமையிலிருந்தே நாகரத்தினத்தைக் கட்டிப் போட்டு வைத்திருக்கிறார்கள் என்று ஆதிசேஷன் சொன்னான். நாகரத்தினம் வசித்து வந்த வரிசையில் முதல் வீடு ஆதிசேஷனுடையது. ஆதிசேஷனுடைய அம்மா எப்போதுமே ஏதாவது ஒரு வீட்டிற்குப் போய் வந்தவளாக இருப்பாள். அந்தச் சுற்றுவட்டாரத்தில் அவளுக்குத் தெரியாமல் ஒரு வயதுப் பெண்ணை வீட்டில் கட்டிப் போட்டு அடைத்திருப்பது சாத்தியமில்லை.

அந்த நாளில் எங்களுக்கு அவ்வப்போது மூச்சு தவறிப் போனது உண்டானால் அது நாகரத்தினத்தால்தான். அவள் அழகானவள் என்று கூறுவது முழுச் சூழ்நிலையையும் குறிப்பதாகாது. எங்கள் ஊரில் இன்னும் எவ்வளவோ பெண்கள் இன்னும் எவ்வளவோ அழகாக இருந்தார்கள். ஆனால் நாகரத்தினத்தைப் பார்க்கும்போது யாருக்கும் அவளுடைய அழகை எட்டிப்பிடித்து விடலாமோ என்ற சபலம் எழும். அதற்கு ஊக்கம் தந்தது அவளுடைய கண்களா புடவைத் தலைப்பா என்று உறுதியாகக் கூற முடியாது. அவள் எங்கள் வீட்டிற்கு வரும் போதெல்லாம் நான் ஏழெட்டுப் பையன்களுடன் மரக்குரங்கு விளையாடிக் கொண்டிருப்பேன்; அல்லது சுவரில் கரிக்கோடுகள் கிழித்து கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருப்பேன்; எங்கள் வீட்டிற்குள் நுழையும்போது நாகரத்தினம் என்னைப் பார்த்து ஒருமுறை புன்முறுவல் புரிவாள். வெளியே வரும் போது புன்முறுவலோடு “ஏன் வீட்டுப் பக்கமே வரலை!” என்று கேட்டு விட்டுப் போவாள். என்னோடு விளையாடிக் கொண்டிருப்பவர்களுக்கு என்மீது ஒருவிசேஷ மதிப்பு, குரூரமான பொறாமை இரண்டும் கலந்து உருவாகும். ஒருமுறை வேண்டுமென்றே பக்கத்து வீட்டு ஜனார்த்தனன் என் முதுகின் மீது கிரிக்கெட் பந்தை வீசியடித்து நான் இரண்டு மாதம் டாக்டரிடம் போய்வர வழிசெய்தான். நான் ஆஸ்பத்திரியில் தங்கிய நான்கு நாட்களில் இருமுறை நாகரத்தினம்

என்னைப் பார்க்க வந்தாள் என்று தெரிந்திருந்தால் அடுத்த முறை என் தலை மீதே பந்தை வீசியடித்திருப்பான். நாகரத்தினத்தை வீட்டில் கட்டிப் போட்டிருக்கிறார்கள் என்ற செய்தியை ஆதி சேஷன் கொண்டு வந்தபோது நல்ல வேளையாக ஜனார்த்தனன் அங்கிருக்கவில்லை. ஆனால் அவன் இருந்திருந்தால் கூட ஆதிசேஷன் தமிழில் என்னோடு பேசியிருந்தால் சங்கடம் ஏதும் கிடையாது. ஜனார்த்தனன் தெலுங்குப் பையன்.

ஆனால் ஜனார்த்தனன்தான் நாகரத்தினத்தைப் பற்றிக் கேவலமாகப் பலமுறை பேசியிருக்கிறான். அந்த ஊரிலேயே மிகப் பெரிய தேவடியாள் என்று கூறியிருக்கிறான். தேவடியாள் என்றால் என்ன என்று அப்போது சரியாகத் தெரியாத காலம். "உனக்கு எப்படித் தெரியும்?" என்று மட்டும் திருப்பிக் கேட்பேன். "ஊரே சொல்லும். உன் ஆசைப் பெண்ணிடம் மாத்யூ என்று சொல்லிப் பார்" என்பான். மாத்யூ எங்கள் ஊரில் பிரபலமான ஃபுட்பால் ஆட்டக்காரன். வாட்ட சாட்டமாகப் பெரிய மீசை வைத்துக்கொண்டு எப்போதும் சிகரெட்டும் கையுமாக இருப்பான். அவனுக்கும் நாகரத்தினத்திற்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும் என்று என்னால் நினைத்துப் பார்க்க முடிந்ததில்லை. ஆனால் இந்த மாத்யூவை அவளுடன் இணைத்து வேறு சிலரும் பேசியிருக்கிறார்கள்.

இப்போது வீட்டைவிட்டு நகரமுடியாமல் நாகரத்தினத்தைக் கட்டிப்போட்டிருக்கிறார்கள் என்று ஆதிசேஷன் சொன்னது இந்த மாத்யூவுக்காகத்தான் இருக்குமோ? எனக்கு மாத்யூ மீது பெரும் வெறுப்பு எழுந்தது. நாகரத்தினம் போன்ற பெண்களை வாட்டி வதைப்பதற்கென்றே இந்த மாதிரி ஆட்டக்காரர்கள் வந்துவிடுகி றார்கள். நான் ஃபுட்பால் ஆடாதது பற்றி எனக்குச் சிறிது ஆறுதலாய் இருந்தது. ஆனால் நான் ஃபுட்பால் ஆடாது போனால் என்ன, ஆடினால் என்ன, இந்தப் பெண்கள் மாத்யூ போன்ற மோசக்காரர்கள் மீதுதானே ஆசை வைக்கிறார்கள்?

எனக்கு நாகரத்தினத்தைப் பற்றி நினைக்க நினைக்க வேதனை அதிகரித்தது. கட்டிப் போட்டிருக்கிறார்கள் என்றால் எப்படி? காலில் சங்கிலி மாட்டிச் சுவரில் ஒரு வளையத்தில் இணைந்திருக்கிற ார்களா? நான் பார்த்திருந்த பல ராஜா ராணி சினிமாக்களில் அப்படித்தான் கைகளைக் கட்டிப் போட்டிருந்தார்கள். சில படங்களில் இரண்டு கைகளையும் சேர்த்துக் கட்டியிருந்தார்கள். அனார்கலியைக் கழுத்து, கை, கால் எல்லா இடங்களிலும் சங்கிலி மாட்டிக் கட்டியிருந்தார்கள். நாகரத்தினத்தையும் அப்படித்தான் சித்திரவதை செய்து கொண்டிருப்பார்களோ? அவளைப் போய்ப்

பார்த்துவிட்டு வந்தால் என்ன? எவ்வளவு நாட்கள் நாகரத்தினம் அவள் வீட்டுக்கு உன்னை அழைத்திருக்கிறாள்? நன்றாக இருந்த நாட்களில் போகாமல் இப்போது அவளைக் கட்டிப் போட்டிருக்கும் போதுதான் போகத் தோன்றுகிறது!

கூடுமானவரையில் என்னை ஒளித்துக் கொண்டே நான் அவள் வீட்டுப் பக்கம் சென்றேன். அரை மைலுக்கும் மேல் நடக்க வேண்டும். ஒரு மிகப்பெரிய வெளிச்சுவர் வட்டம். அதற்குள் பதினைந்து இருபது கட்டிடங்கள். அதில் இரு கட்டிடங்கள் மட்டும் குடியிருப்பிடங்கள். இரண்டாவது வரிசையில் முதல் வீடுதான் ஆதிசேஷனுடையது. நான் சுற்று வழியாக நாகரத்தினத்தின் வீட்டை அடைந்தேன். வெளியே அவளுடைய பாட்டி உட்கார்ந்திருந்தாள்.

"என்னடா, சுப்பிணி பிள்ளையா?" என்று கேட்டாள்.

"இல்லை, பாட்டி. நான் சாம்பசிவத்தின் பிள்ளை."

"அது யாரு சாம்பசிவம்?"

"என்ன பாட்டி, எங்க அப்பாவைத் தெரியாதா? நீங்க எங்களுக்கு உறவுன்னுகூட அம்மா சொல்லுவா."

"ஆமா, சாகிற வயசாச்சு. இப்ப உறவு என்ன வேண்டிக் கிடக்கு?"

நான் பேசாமல் நின்றேன்.

"என்னடா வேணும்? ஏன் இங்கே வந்து பழியா நிக்கறே?"

எனக்குப் பதில் ஒன்றும் தோன்றாமல் நின்று கொண்டிருந்தேன்.

"போடா, போய்த் தள்ளி நில்லு. வீட்டெதிரே கடங்காரன் மாதிரி மறிச்சு நிக்காதே. போடா!"

நான் ஒதுங்கி நின்றேன். அப்போது நாகரத்தினத்தின் அம்மா வெளியே வந்தாள். "என்னடா? என்ன வேணும்?" என்று கேட்டாள்.

"அம்மா உங்ககிட்ட அரிசிச் சல்லடை வாங்கிண்டு வரச் சொன்னா."

"யாரு உங்கம்மாவா?"

நான் சொன்னேன்.

அவள் முதலில் தயங்கினாள். அப்புறம், "சரி, உள்ளே வா" என்றாள்.

நான் பாட்டியைத் தாண்டி வீட்டினுள் சென்றேன். முன் வெராந்தாவும் சமையல் பகுதியும் தவிர மற்ற இடங்களில் விளக்கேற்றப்பட வில்லை. நாகரத்தினத்தை இவ்வளவு குறுகிய இடத்தில் எப்படி சங்கிலியால் கட்டிப் போட்டிருக்கக் கூடும்? என் கற்பனைச் சிறைகள் விசாலமானதாக இருந்தன.

நான் அந்த வீட்டின் சமையல் பகுதிவரை சென்றேன். நாக ரத்தினத்துடன் கூடப் பிறந்தவர்கள் இரு அண்ணன்கள், ஒரு தங்கை. யாரும் அந்நேரத்தில் இங்கு இல்லை. நாகரத்தினமே இல்லையோ என்று சந்தேகம் வந்தது.

"நாளைக்கே கொண்டு வந்து கொடுத்துடு," என்று நாகரத்தி னத்தின் அம்மா பெரிய அரிசி சல்லடை ஒன்றை என்னிடம் கொடுத்தாள்.

"வீட்டில் யாரும் இல்லையா? பாமா எங்கே?" என்று கேட்டேன். பாமா நாகரத்தினத்தின் தங்கை.

"ஊருக்குப் போயிருக்கா."

"எந்த ஊருக்கு? இப்ப லீவு கூட இல்லையே?"

"அவ பாட்டி ஊருக்குப் போயிருக்கா. அவளுக்கு உடம்பு சரியில்லே."

"யாரு, வாசல்லே இருக்காளே, அந்தப் பாட்டியா?"

"அவ இல்லே. இன்னொரு பாட்டி"

"நாகரத்தினம் எங்கே?"

"ஏன்?"

"இல்லே, கேட்டேன்..."

"சல்லடையை ஒழுங்கா நாளைக்குத் திருப்பிக் கொண்டு வந்து கொடு, போ."

நான் சல்லடையுடன் வெளியே வந்துவிட்டேன். இருட்டாக இருந்த அந்த இரண்டு அறைகளில் ஏதாவது ஒன்றில்தான் நாகரத்தினம் இருக்க வேண்டும்.

நான் வீட்டிற்குப் போகவில்லை. சல்லடையோடு ஒரு மரத் தடியில் உட்கார்ந்துவிட்டு மீண்டும் நாகரத்தினத்தின் வீட்டுக்குப்

போனேன். இப்போது வெளியே விளக்கு எரியவில்லை. ஆனால் உள்ளே ஒரு அறையில் மட்டும் வெளிச்சம் இருந்தது. நான் உள்ளே போனேன். நாகரத்தினத்தின் அம்மாவும், அப்பாவும், பாட்டியும் மிகவும் அடங்கிய குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். நாகரத்தினத்தைப் பற்றித்தான் இருக்க வேண்டும்.

பாட்டி முதலில் என்னைப் பார்த்து விட்டாள். "திருடன்! திருடன்!'' என்று கத்தினாள். நாகரத்தினத்தின் அம்மாவும் அப்பாவும் திடுக்கிட்டு, "எங்கே? எங்கே?" என்று பதறினார்கள். நான் இருட்டில் நின்று கொண்டிருந்ததால் அடையாளம் உடனே தெரிந்திருக்கவில்லை. நான் ஓட எத்தனித்தேன். இப்போது எல்லாரும் "திருடன்! திருடன்!" என்று கத்தி என்னைத் துரத்தி னார்கள். நான் வெளியே இருட்டுப் பிரதேசமாக ஓடினேன். அவர்களிடமிருந்து பிடிபடாமல் ஒளிந்து கொண்டு என் வீடு வந்து சேருவது சிரமமாயில்லை. அரிசிச் சல்லடையை யார் கண்ணிலும் படாமல் ஒளித்து வைப்பதுதான் சிரமமாயிருந்தது.

எனக்கு எப்படியும் அன்றிரவே நாகரத்தினத்தைப் பார்த்து விட வேண்டும் என்று இருந்தது. என் வீட்டில் ஒன்பது மணிக் கெல்லாம் எல்லோரும் படுத்து விடுவோம். வீட்டு வாசல் கதவை எங்க அப்பா இழுத்துப் பூட்டி வைப்பார். மறுநாள் காலை ஐந்து மணிக்குப் பால்காரன் வரும்போது அந்தக் கதவு திறக்கப்படும்.

என்னால் தூங்க முடியவில்லை. நாகரத்தினம் மாத்யூவுக்கு விசேஷச் சலுகைகள் அளிப்பது பற்றிக்கூட எனக்கு வருத்தம் ஏற்படவில்லை. ஆனால் இருட்டறையில் அவளைச் சிறை வைத்துச் சாகக் கிடக்கும் ஒரு பாட்டியும் சதிகாரர்கள் போல ரகசியம் பேசும் பெற்றோர்களும் அவளைச் சிறை வைத்துக் காவல் காப்பது தாங்க முடியாத வேதனையாக இருந்தது. ஒரு குதிரையும் கத்தியும் இருந்தால் அவளைச் சிறை மீட்டு என் வீட்டுக்கு அழைத்து வரலாம்.

ஆனால் என் வீட்டில் அவளை எங்கே ஒளித்து வைப்பது? எது எப்படியிருந்தாலும் என் அப்பா அவள் அப்பாவிடம் போய் விஷயத்தைச் சொல்லிவிடுவார். யாரிடம் வம்பு வைத்துக் கொண்டாலும் அந்தப் பாட்டியிடம் தலையைக் கொடுத்து விடக் கூடாது.

எனக்கு நிலை கொள்ளவில்லை. படுக்கப்போகும் முன் அம்மாவிடம், "அம்மா, நம்ப நாகரத்தினத்தின் வீட்டுக்கு போயிட்டு வரலாமா?" என்று கேட்டேன்.

"என்னது?'' என்று அவள் கேட்டாள். அவளுக்கு நான் கேட்டது சற்றும் புரியவில்லை.

"நாகரத்தினத்தின் வீட்டுக்கு."

"இப்பவா? என்ன உளர்றே?"

"ஆமாம்மா. அவ வீட்டிலே என்னமோ ஆயிடுத்துப் போலிருக்கு."

"என்ன ஆயிடுத்து?"

"தெரியலே. ஆனா என்னமோ ஆயிடுத்து. அவா அப்பா அம்மாவெல்லாம் எப்போ பாத்தாலும் என்னென்னமோ இரகசியம் பேசிண்டிருக்கா."

"இரகசியமா? ஏண்டா, அவா வீட்டிலே அவா பேசிக்காம யாரு பேசிப்பா? தத்துப் பித்துன்னு ஏதாவது உளறிண்டு இருக்காதே. பேசாம படுத்துக்கப் போ."

"அவா வீட்டைப் பத்தி உனக்கு ஒண்ணுமே தெரியாதா?"

"என்ன தெரியணும்?"

"நாகரத்தினம் பத்தி." இதைச் சொல்லிவிட்டு நான் நாக்கைக் கடித்துக் கொண்டேன். இப்போது மாத்யூ பற்றியும் அம்மாவிடம் சொல்ல வேண்டியிருக்கும். அம்மாவுக்கு ஃபுட்பால் எல்லாம் ஒண்ணும் புரியாது.

"நாகரத்தினத்துக்கு என்னடா? முந்தாநேத்திக்குக் கூடப் பாத்தேனே?"

"அவளைக் கட்டிப் போட்டிருக்காளாம்."

"என்னது?"

"கட்டிப் போட்டிருக்காளாம்."

"ஏதாவது யாராவது சொல்றான்னு இங்கே வந்து பிராணத்தை வாங்காதே. நாகரத்தினம் ஊருக்குப் போயிருக்கா. அவ பாட்டிக்கு உடம்பு சரியில்லை."

"இல்லேம்மா, அவ பாட்டி இங்கேதான் இருக்கா. நாகரத்தினத்தைத் கழுத்திலே, கையிலே சங்கிலி மாட்டிக் கட்டிப் போட்டிருக்காளாம். நானே பாத்தேன்."

"என்ன பேத்தல்! நீ எங்கடா பாத்தே?"

"நான் இன்னிக்கு அவா வீட்டுக்குப் போனேன். அந்தப் பாட்டி வாசல்லியே காவல் காத்திண்டிருக்கா. அவ ரொம்பக் கெட்டவ. யார் வந்தாலும் கடங்காரா, கடங்காரான்னு துரத்தறா."

"அப்படியா? பாவம், அந்தப் பாட்டி ரொம்ப நல்ல மாதிரி யாச்சே?"

"ரொம்பக் கெட்டவ, அம்மா. பாவம், நாகரத்தினத்தைச் சவுக்காலே அடிக்கறா."

"உனக்கு என்னாயிடுத்து? நாகரத்தினம் அவ பாட்டி ஊருக்குன்னா போயிருக்கா. நாங்கூட இங்கேந்து சீக்காப் பொடியும் அப்பளமும் அனுப்பிச்சிருக்கேன்."

"இல்லேம்மா. அவ பாட்டி இங்கேயே இருக்கா."

"அது வேற பாட்டிடா, மண்டு."

அம்மாவிடமிருந்து மண்டுப் பட்டம் வாங்கியவுடனே திடீரென்று ஏதோ திரை விலகிய மாதிரி இருந்தது. ஆதிசேஷன் அயோக்கியன். என்னிடம் இல்லாததும் பொல்லாததுமாகப் புளுகியிருக்கிறான். நாளை முதல் காரியம் அவன் நெற்றியில் ஒரு குத்துவிட வேண்டும்.

எனக்குச் சில விஷயங்கள் மட்டும் புரியவே இல்லை. ஏன் நாகரத்தினத்தின் அம்மாவும் அப்பாவும் ரகசியம் பேசிக் கொண்டிருந்தார்கள்? மாத்யூ பற்றி எனக்கே தெரிந்த போது அவர்களுக்கு ஏன் தெரியவில்லை? தெரிந்தும் தெரியாதது போல் இருக்கிறார்களே?

நாகரத்தினத்தை யாரும் கட்டிப் போடவில்லை. அவள் வெளியூர்தான் போயிருக்கிறாள் என்ற தகவல் எனக்கு ஆறுதல் தரவில்லை. அன்றே அன்று இரவே நாகரத்தினம் மாத்யூ விஷயம் ஒரு வழியாக அலசித் தீர்த்துவிடப்பட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்று தோன்றியது.

அத்துடன் கடன் வாங்கி வந்த அரிசிச் சல்லடையை என்ன சொல்லித் திருப்பித் தருவது என்ற கவலையும் எழுந்தது.

1982